Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 6 பக்கம் விலை 45 காசு



**மக்கள்**

மக்கள் மனதில் உள்ள மாசு, மதவெறி, ஜாதி, சுயநலம், ஆணவம், ஆதிக்க எண்ணம், ஒழிந்தாக வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**வதந்தி**

அடக்கமற்ற மனிதன் வெளியிடும் பொய் வதந்திகளால் அவன் தனக்கு மட்டுமின்றி, தன் சமுதாயத்திற்கும் பெருங்கேட்டை விளைவிக்கிறான்.

-தந்தை பெரியார்



மலர்: 7 சென்னை: 22 - 6 - 83 புதன் வெளியூர்: 23 - 6 - 83 வியாழன் இதழ்: 243

# இ. காங்கிரஸ் ஆதரவு வாபஸ் ஆனது

# புதுவை தி.மு.க. அரசு கவிழும்

## சட்டசபை கலைக்கப்படுமா?

பாண்டிச்சேரி, ஜூன் 22- தி. மு. க. தலைமையிலான புதுவை மாநில அரசிற்கு இந்திரா காங்கிரஸ் அளித்துவந்த ஆதரவு விலக்கிக் கொள்ளப் பட்டது என்று புதுவை மாநில இந்திரா காங்கிரஸ் தலைவர் பி. சண்முகம் அறிவித்துள்ளார். இதனால் புதுவை சட்டசபையில் பெரும்பான்மை இழந்த தி. மு. க. ஆட்சி கவிழும் நிலையில் உள்ளது.

சட்டசபையைக் கலைத்து விட்டு தேர்தல் நடத்த வேண்டும் என்ற கோரிக்கை வலுப்பெற்று வருகிறது. இதற்கிடையில் சட்டசபையில் உள்ள மூன்று ஜனதாக் கட்சியினரின் ஆதரவினைப் பெற்று ஆட்சியில் ஒட்டிக் கொள்ள தி. மு. க. தலைமை வலை வீசிவருகிறது.

பாண்டிச்சேரியில் டி. ராமச்சந்திரன் தலைமையிலான தி. மு. க. அமைச்சரவை சட்டசபையில் மெஜாரிட்டி இழந்து விட்டது.

புதுவை மாநில தி.மு.க. அரசு எந்த நேரத்திலும் கவிழும் நிலை உருவாகியுள்ளது. தமிழ்நாட்டில் திமுக.-இ.காங்கிரஸ் உறவு முறிந்துவிட்ட நிலையிலும் புதுவையில் அக் கட்சியோடு ஒட்டி உறவாட தீவிரமாக முயற்சித்து வந்தது பலனளிக்கவில்லை.

குழாயடிச் சண்டை போல மேடைதோறும் இ. காங்கிரஸ் அமைச்சர்களை. தி.மு.க. அமைச்சர்களும் தி. மு. க. அமைச்சர்களை இ. காங்கிரஸ் அமைச்சர்களும் பகிரங்கமாகப் பொதுமேடையிலேயே குற்றம்சாட்டிக் கொண்டார்கள்.

புதுவையில் தோன்றியுள்ள அரசியல் நெருக்கடி குறித்து புதுவை மாநில கவர்னரை மத்திய உள்துறை அமைச்சர் பி. சி. சேத்தி அழைத்துப் பேசியதும் புதுவை மாநில நிலவரம் குறித்து புதுவை மாநில ஆளுநர் மத்திய அரசுக்கு விரிவான அறிக்கை கொடுத்து இருப்பதும் நினைவிருக்கலாம்.

புதுவை மாநில அரசியல் நெருக்கடி குறித்து காங்கிரஸ் மேலிடத் தலைவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்த டெல்லி சென்று இருந்த மாநில இ. காங்கிரஸ் தலைவர் பி. சண்முகம் பாண்டிச்சேரி திரும்பியவுடன் அவசர நடவடிக்கைகளில் இறங்கினார்.

### அவசரக் கூட்டம்

பாண்டிச்சேரியில் உள்ள சுற்றுலா மாளிகையில் காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்களின் அவசரக் கூட்டம் இன்று (புதன் கிழமை) காலை நடந்தது.

தி. மு. க. தலைமையிலான மாநில அரசிற்கு இந்திரா காங்கிரஸ் இதுவரை அளித்துவந்த ஆதரவை வாபஸ் பெறுவதாக கூட்ட முடிவில் மாநில இந்திரா காங்கிரஸ் தலைவர் பி. சண்முகம் அறிவித்தார்.

புதுவை மாநில சட்டமன்ற காங்கிரஸ்கட்சியின் முடிவினை டெல்லியிலுள்ள காங்கிரஸ் மேலிடத் தலைவர்களுக்கு அறிவித்துவிட்டதாகவும் சண்முகம் கூறினார்.

### கட்சி நிலவரம்

30 உறுப்பினர்கள் கொண்ட புதுவை மாநில சட்டமன்றத்தில் கட்சிகளின் பலம் வருமாறு:-

| | |
|---|---|
| தி. மு. க. | 13 |
| இ. காங்கிரஸ் | 10 |
| ஜனதா | 3 |
| கழகம் | 1 |
| மார்க்சிஸ்ட் | 1 |
| சுயேச்சை | 1 |
| முஸ்லிம் லீக் | 1 |

புதுவை மாநில தி,மு.க அரசின் மீதுஅனைத்துக் கட்சிகளுமே ஊழல் புகார்களைக் கூறி வருவதால் சட்ட சபையைக் கலைத்து விட்டு மறு தேர்தல் நடத்த வேண்டும் என்ற கோரிக்கை புதுவை மாநிலத்தில் வலுப்பெற்று வருகிறது.

### வலை வீச்சு

இதற்கிடையில் பதவியில் எப்படியாவதுஒட்டிக் கொள்ள தி. மு. க தலைமை ஜனதாவிற்கு வலைவீசத்தொடங்கியுள்ளது.டெல்லியில் உள்ள ஜனதா கட்சி உயர் மட்ட தலைவர்களை சரிகட்டி ஆட்சியில் நீடிக்கும் நப்பாசை தி.மு. கவிற்கு ஏற்பட்டுள்ளது.

ஆனால் புதுவை மாநில ஜனதா கட்சி மாநில தி. மு. க ஆட்சிக்கு எதிராகப்போர்க்கொடிஉயர்த்தியுள்ளது.

தி, மு. க தனது பெரும்பான்மையை நிரூபிக்க சட்டசபைக் கூட்டத்தை உடனடியாக கூட்ட வேண்டும் என்று சட்டசபை ஜனதாக் கட்சி தலைவர் பி.உத்திரவேலு கோரியுள்ளார்.

ஊழல்குற்றச்சாட்டிற்கு ஆளாகியுள்ள மக்கள் விரோத தி. மு. க ஆட்சிபெரும்பான்மையை இழந்துவிட்ட நிலையில் பதவியில் நீடிக்கக்கூடாது என்ற கருத்துக்கு ஆதரவு பெருகிவருகிறது.

### முதல்வர் அறையில் தி மு க எம் எல் ஏக்கு சிறை

தி. மு. க. விலிருந்து விலக்கப்பட்ட புதுவை சட்டமன்ற உறுப்பினர் ராமலிங்கம் பலாத்காரமாக முதல்வர் டி. ராமச்சந்திரனின் அறையில் 'சிறை' வைக்கப்பட்டு இருப்பதாகக் கடைசியாக வந்த செய்திகள் கூறுகின்றன.

இ,காங்கிரஸ் ஆதரவை விலக்கிக் கொண்ட செய்திகிடைத்தவுடனேயே ராமலிங்கத்தைச் சரிகட்டி தி:மு. க வில்மீண்டும் சேர வைக்க முயற்சிகள் நடைபெற்றன.

முதல்வர் டி ராமச்சந்திரன் அறையிலிருந்து கருணாநிதியுடன் தொலைபேசி மூலம் தொடர்பு கொள்ளப்பட்டது. டி. ராமச்சந்திரன் முதலமைச்சராக தொடருவதற்கு அனுமதிக்கப்பட்டால் தாம் தி.மு.க.வில் சேர முடியாது என்று ராமலிங்கம் மறுத்து விட்டதாகவும் செய்திகள் கிடைத்துள்ளன.

டி. ராமச்சந்திரனுக்கு ஆதரவு தர மறுத்து வரும் ராமலிங்கத்தை வழிக்குக் கொண்டுவர சாம, தான, பேத, தண்ட வழிகள் அனைத்தையும் பயன்படுத்த தி. மு. க. தலைமை தயாராகி இருக்கிறது.

## சரித்திர நாயகனின் சாதனைப்பட்டியல் (2)

ஆட்சியிலிருந்த காலத்தில் விவசாயிகளுக்கு கருணாநிதி புரிந்த கொடுமைகளில் ஒரு சிறுபகுதியை மட்டும் நேற்றையக் கட்டுரையில் குறிப்பிட்டிருந்தேன்.

புரட்சித்தலைவரிடம்ஆட்சிப் பொறுப்பைமக்கள் ஒப்படைத்த பிறகு, இருந்ததை இழந்த கருணாநிதிக்கு ஆத்திரம் கொப்பளித்து; அதனால் போராட்டங்களைத் தூண்டிவிடலானார்.

வன்முறையைக் கட்டவிழ்த்துவிட்டு புரட்சித் தலைவர் அரசுக்கு தொல்லை தருவதே அவரது நோக்கம்.

''வன்முறை என்பது இரு பக்கமும் கூர்மையுள்ள கத்தி. அதைத் தூண்டிவிட்டவனுக்கும் ஆபத்தை விளைவிக்கும்'' என்றார் பேரறிஞர் அண்ணா.

ஆனால் அண்ணாவின் கருத்து எதையும் ஏற்றுக் கொள்ளாததைப் போலவே இதையும் ஏற்றுக் கொள்ளவில்லை கருணாநிதி.

பஸ் ஊழியர்கள், மாணவர்கள், ஆசிரியர்கள், என்.ஜி.ஓ.வினர் இப்படி பல்வேறு தரப்பினரையும் தூண்டிவிட்டுப் போராட்டம் நடத்தச் செய்தார். நாள் தவறினாலும் போராட்டம் தவறாது என்கிற அளவுக்கு கருணாநிதி வெகு தீவிரமாக வேலை செய்தார்.

ஆனால் புரட்சித்தலைவர் மக்கள் ஆதரவுடன் அனைத்தையும் பொறுமையாக சமாளித்தார்.

வன்முறையைத் தலைவர்களே தூண்டிவிடும் நிலைமை வந்தால் நாடு என்னவாகும்? பொருளாதார நிலை சீர்கேடு அடையாதா?

**கொள்கை பரப்பு செயலாளர்**
**செல்வி ஜெயலலிதா**

அரசாங்க சொத்துக்களை நாசப்படுத்தினால் அதனால் பொதுமக்களுக்குத்தானே நட்டம்?

புரட்சித் தலைவர் கொண்டுவந்த தன்னிறைவுத் திட்டத்தின்கீழ் சின்னஞ்சிறிய கிராமங்களுக்குக்கூட இணைப்புச் சாலைகள் ஒருங்கிணைப்புச் சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன.

சாலைகளை மட்டும் அமைத்துக் கொடுத்தால் போதுமா? அந்தக் கிராமத்து மக்கள் வேறு ஊர்

(2-ம் பக்கம் பார்க்க)

**இ. ஐ. டி. பாரி சர்க்கரை ஆலை பிரச்சனை:**

### முதல்வர் தொழிற்சங்கத் தலைவர்கள் சந்திப்பு

சென்னை, ஜூன் 22— நெல்லிக்குப்பம் இ. ஐ.டி. பாரி சர்க்கரை ஆலை பிரச்னை சம்பந்தமாகத் தொழிற்சங்கத் தலைவர்கள் வி. பி. சிந்தன். கோவிந்தராஜு, எஸ்.சி.சி. அந்தோணிப் பிள்ளை ஆகியோர் இன்று (புதன் கிழமை) முதல்வர் புரட்சித் தலைவரைச் சந்தித்துப் பேசினார்கள்.

சர்க்கரை ஆலையை மூடி விடப் போவதாக நிர்வாகம் அறிவித்து இருந்தது. சர்க்கரை ஆலையை மூடுவதைத் தடுக்க முதல்வர் புரட்சித் தலைவர் அக்கறை கொண்டதன் விளைவாக இந்த சந்திப்பு நிகழ்ந்தது

சர்க்கரை ஆலை நிர்வாகிகளுடன் முதல்வர் புரட்சித்தலைவர் நாளை மறுதினம் (24-ஆம் தேதி) பேச்சு வார்த்தை நடத்துகிறார்.

## முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவின்படி சென்னை பொது மருத்துவமனையில்

# அமைச்சர் அண்டே 3 மணி நேர திடீர் சோதனை



### தாமதமாக வந்தோர் மீது நடவடிக்கை

**சென்னை, ஜூன் 22- முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவின்படி, அமைச்சர் அண்டே சென்னை பொதுமருத்துவமனையில் 3 மணி நேரம் திடீர் சோதனை நடத்தினார்**

பணிக்கு தாமதமாக வந்த ஹவுஸ்சர்ஜன்கள் ,பட்ட மேல் படிப்பு மாணவர்கள், மற்றும் செவிலியர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க அமைச்சர் அண்டே உத்தரவிட்டார்.

1-வது வார்டில் கழிப்பறை மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்கள் சுத்தமாக வைத்திருக்க வேண்டும் என அதற்கு பொறுப்பான ஊழியர்களை அமைச்சர் அண்டே எச்சரித்தார்,

முதல்வர் புரட்சித் தலைவர் உத்தரவிட்டதற்கு இணங்க, சுகாதாரத்துறை அமைச்சர் டாக்டர் எச்.வி. அண்டே இன்று காலை சென்னை பொதுமருத்துவமனை, மற்றும் மருத்துவபட்ட மேற்படிப்புமாணவர்கள் விடுதி ஆகியவற்றுக்குச் சென்று திடீர் சோதனை நடத்தினார்.

காலை 7 மணிக்குச் சென்ற அமைச்சர் அண்டே 10.05மணிவரை 3 மணி நேரம் மருத்துவமனையின் பல்வேறு வார்டுகளுக்கும் சென்று பார்வையிட்டார்.

அமைச்சருடன் சுகாதாரத்துறை செயலாளர் லட்சுமிகாந்தன் பாரதியும் உடன் சென்றிருந்தார்.

அமைச்சர் அண்டே, பெண்கள் புறநோயாளிகள் பிரிவு கண், தொண்டை மூக்கு புறநோயாளிகள் உட்பட பல்வேறு பிரிவுகளுக்கும் சென்று பார்வையிட்டார்:

இப்பிரிவுகளில் பணிக்குத் தாமதமாக வந்த சில அவுஸ் சர்ஜன்கள் மருத்துவ பட்ட மேற்படிப்பு மாணவர்கள் செவிலியர்கள் ஆகியோர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கஅமைச்சர் அண்டே உத்தரவிட்டார்.

அதன் பிறகு அமைச்சர் அண்டே 1-வதுவார்டைச் சுற்றிப் பார்த்தார்,

அந்த வார்டின் கழிப்பறை மற்றும் அதை ஒட்டிய பகுதிகள் சுத்தமாக வைத்திருக்க வேண்டும் என அதற்குப் பொறுப்பான ஊழியர்களுக்கு அமைச்சர் அண்டே உத்தரவிட்டார்.

2 நாட்களுக்குப் பிறகு தான் மீண்டும் வருவதாகவும் அதற்குள் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளாவிட்டால் அதற்கு பொறுப்பான ஊழியர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என அமைச்சர் எச்சரித்தார்.

அதன் பிறகு அமைச்சர் அண்டே 2-வது வார்டு மற்றும் 8-வது வார்டுகளை சுற்றிப் பார்த்தார்.

அதைத் தொடர்ந்து மருத்துவபட்டமேற்படிப்பு மாணவர் விடுதிக்கு சென்று அமைச்சர் அண்டே சுற்றிப் பார்த்தார்.

அங்கு தேவைப்படும் தண்ணீர் சப்ளை செய்யப்படவும், மின்விசிறிகள் போடவும்ம் நடவடிக்கை எடுக்கப்படு, என அமைச்சர் அண்டே தெரிவித்தார்,

சென்னை பொது மருத்

(1ம் பத்தி பார்க்க)

(8-ம் பத்தி தொடர்ச்சி)

துவமனையில் சிகிச்சை பெற்றுவரும் நடிகர் தங்கவேல் கிட்டப்பா எம் எல்ஏ ஆகியோரைஅமைச்சர் அண்டே சந்தித்து உடல்நலம் விசாரித்தார்,

**தலைமைக் கழக அறிவிப்பு**

**கொள்கை பரப்புச்செயலாளர்**

**செல்வி ஜெயலலிதாவின் நெல்லை மாவட்ட சுற்றுப்பயணம்**

| | |
|---|---|
| ஜூலை—6 | திருச்செந்தூர் (பொதுக்கூட்டம்) |
| ,, | கோவில்பட்டி (பொதுக்கூட்டம்) |
| ,, 8 | திருநெல்வேலி (பேரணி - பொதுக்கூட்டம்) |

இந்தக் கூட்டம், பேரணி ஆகியவற்றை மாவட்ட கழகத்தின் சார்பில் மாவட்ட செயலாளர் திரு. கருப்புசாமிபாண்டியன் எம்.எல்.ஏ. அவர்கள் ஏற்பாடு செய்கிறார்கள்



## தென் ஆற்காடு மாவட்டம் வரும்

நாட்டு மக்களின் நம்பிக்கை நாயகரே!
உழைப்பவர் போற்றும் ஒப்பற்ற தலைவரே
சரித்திரம் காணா சாதனைகள் புரிந்து
ஏழைக் குழந்தைகளுக்கு உணவளிக்கும்
உத்தமத் தலைவரே!
"கிருஷ்ணா நதிநீர்" கொண்டு வந்து
இந்திய சரித்திரத்தில் மாநில முதல்வர்களின்
வழிகாட்டியாய் உள்ள எங்களின் இதய தெய்வமே!

**மாண்புமிகு புரட்சித்தலைவரே**
**வருக! வருக! வருக**

மாண்புமிகு அமைச்சர் பெருமக்களே வருக! வருக!

* *

**இராம. ஆதிமூலம்**
தென் ஆற்காடு மாவட்ட
துணை செயலாளர்
மாவட்ட எம். ஜி. ஆர்.
மன்றம்

**A, முருகேசன்**
EX. M. P.
B. Com. B. G. L.
கழக வழக்கறிஞர்

**சிதம்பரம்**

கடலூர் துரை

---

எத்திக்கும் உனது புகழ் தித்திக்கும் இன்பமே!
என்னுயிர் தலைவா!
எந்தன்! எலும்பாகி சதையாகி விழியான முதல்வா!
எம்பெரும் இன்பமே! வருக! வருக!

மாண்புமிகு பண்ருட்டியார் அவர்களே வருக! வருக!
மாண்புமிகு கே.ஏ.கே. அவர்களே வருக! வருக!

**வி. விபிஷணன்**

அண்ணா விவசாயப்பிரிவு ஒன்றிய செயலாளர்
தலைவர், கூட்டுறவு பால் உற்பத்தியாளர் சங்கம்
கட்டமுத்துப்பாளையம்,
அண்ணாகிராம ஒன்றியம்

கடலூர் துரை

---



தொழிலாளர்
நலன் காக்கும்
எங்கள் இதய தெய்வம்
மாண்புமிகு
தமிழக முதல்வரே
வருக! வருக!

பண்ருட்டி வருகைதரும்
மாண்புமிகு
அமைச்சர் பெருமக்களே
வருக! வருக!

**சீனு. செயராமன் B.A.B.L.**

கழக வழக்கறிஞர்
பண்ருட்டி

கடலூர் துரை

---





இப்படை தோற்கின் எப்படை வெல்லும்?
கொடி பறக்க, கொள்கை சிறக்க,
படை நடத்தும் புரட்சித்தலைவா!
உன் பாதையை எப்போதும் தொடர்வோம்.

புரட்சித்தலைவரின் அன்புத்தம்பி
பண்ருட்டியார் புகழ் ஓங்குக!

இவண்,

**எம். நடராசன் B.A.B.L.**
**துரை. தட்சிணாமூர்த்தி B.A.B L.**

கழக வழக்கறிஞர்கள்,
பண்ருட்டி.

— கடலூர் துரை

---

# சரித்திரநாயகனின் சாதனை பட்டியல்...

(1 ம் பக்கத் தொடர்ச்சி)

"ளுக்குச் செல்லவேண்டுமானால் காய்கறி போன்றவற்றை நகரில் கொண்டுபோய் விற்கவேண்டுமானால் அவ்வளவு தூரம் நடந்தா போக முடியும்?

எனவே அவர்களுக்குப் போக்குவரத்து வசதிகள் செய்து தரவேண்டும். அதற்குப் பேருந்துகள்தேவை.

எத்தனையோ மிகச்சிறிய கிராமங்களில் 100 குடும்பங்கள்தான் வசிக்கின்றன. அத்தகைய கிராமங்களுக்கு பெரிய பேருந்துகளைப் பயன்படுத்த வேண்டிய அவசியமில்லை. மேலும் குக்கிராமங்களிலுள்ள குறுகிய சந்துகளில் பெரிய பேருந்துகள் திரும்புவதும் சிரமமான காரியம்,

எனவே சிறிய பேருந்துகள் தான் விட முடியும் ஏராளமான மினி பஸ்களை கிராம மக்கள் நலனுக்காக புரட்சித்தலைவர் அரசு விட்டுள்ளது. பெரிய பேருந்துகள் பழசு ஆனதும் அவற்றைக் கூட உருமாற்றி சிறிய பஸ்ஸாக ஆக்கிக் குக்கிராம மக்களின் நலனுக்காக விட்டுள்ளது புரட்சித்தலைவர் அரசு.

பேருந்து வாங்க புதிதாக வரிபோடுகிறோம். என்று மக்களை சிரமப்படுத்தாமலே, இருப்பதை வைத்து மக்களுக்கு பயன்படுமாறு செய்யும் சாதனைகளைப் புரட்சித்தலைவர் அரசு செய்து வருகிறது என்பதற்கு இது ஓர் உதாரணம்.

பழைய பஸ்கள் அனைத்தையும் இவ்வாறு 'மினி' பஸ் ஆக்கிவிட முடியும் என்று கூறமுடியாது.

பயணம் செய்யும் மக்களுக்குப் பாதுகாப்பாக இருக்க, தரமான நல்ல நிலையில் உள்ள பேருந்துகளை மட்டுமே அரசு பயன் படுத்துகிறது.

மாருதி நிறுவனம் தயாரிக்கும் சிறிய பேருந்துகளை வாங்கி மேலும் பல சிறு கிராமங்களுக்கு போக்குவரத்து இணைப்புக் கொடுப்பது குறித்து புரட்சித்தலைவர் ஆலோசனை நடத்தினார்.

இந்த மினி பஸ்களை வாங்க உலக வங்கியிடம் கடன் வாங்கவேண்டிவரும்.

அந்தக் கடனை வாங்குவது யார்? புரட்சித் தலைவர் கடன் வாங்கவில்லை. அனைத்திந்திய அண்ணா தி, மு. கழகம் கடன் வாங்கவில்லை.

தமிழக அரசுதான் அந்தக் கடனை வாங்குகிறது.

அப்படிக் கடன் பெற்று பேருந்துகளைத் தமிழக அரசு வாங்குகிறது.

எந்தக்கட்சி ஆட்சிக்கு வந்தாலும் அந்தக் கடனைத் திருப்பிச்செலுத்தித்தான் ஆக வேண்டும்.

மக்கள் கட்டும் வரிப்பணத்திலிருந்து தான் அந்தப் பணத்தை திருப்பிச் செலுத்துகிறது அரசு.

எனவே எந்தக் கட்சி ஆட்சி செய்தாலும் உண்மையான சுமை வரிகட்டுகிற பொதுமக்களுக்குத்தான்.

எனவே வாங்கப்படுகிற பேருந்துகளும் பொது மக்களின் சொத்துக்களே.

போராட்டத்தைத் தூண்டிவிடுபவர்கள், தூண்டிவிட்டுவிட்டு அமைதியாக இருந்துகொள்கிறார்கள்.

போராட்டம் நடத்துபவர்கள் செய்யும் முதல் காரியம் என்ன? பொதுச் சொத்தாகிய பேருந்துகளைக் கொளுத்துகிறார்கள்.

**'இப்படிப்பட்ட வன்முறையை அனுமதிக்க மாட்டோம் பொதுச் சொத்து அழிக்கப்படுவதை தடைசெய்வோம்" என்று புரட்சித்தலைவர் அறிவித்தால் சிலருக்கு கோபம் பொத்துக்கொண்டு வருகிறது**

இது சர்வாதிகாரம் என்கிறார்கள். அராஜகம் அடக்குமுறை என்றெல்லாம் கூச்சலிடுகிறார்கள்.

பொதுச் சொத்துக்களை நாசப் படுத்தினால் பொது மக்களின் பணம்தானே விரயம் ஆகிறது.

பேருந்துகளை வாங்குவதற்குப் பட்டகடனைத் திருப்பிச் செலுத்த—அரசு பேருந்துகளை ஓட்டி வருமானம் சம்பாதிக்க வேண்டும். வட்டியும் கட்ட வேண்டும்.

எனவே பேருந்துகளை ஓடவிடுங்கள், நாசப் படுத்தாதீர்கள்.

இதேபோல் அரசு செய்யும் ஒவ்வொன்றும் மக்களுக்காகத்தான் செய்யப்படுகிறதுஎன்பதை உணர்ந்து அனைவரும் அரசோடு ஒத்துழைக்க வேண்டும்.

சில எதிர்க்கட்சிகள் தீவட்டிப் போராட்டம் என்கிறார்கள்.

கையில் எரியும் தீப்பந்தங்களோடு தீவட்டிகளோடு ஆயிரம் பேர் இரண்டாயிரம் பேர் ஊர்வலமாக வந்தால் — அந்த நேரத்தில் வேண்டுமென்றே யாராவது அவர்களின் ஆத்திரத்தைக் கிளப்பிவிட்டால் என்ன நடக்கும் என்பதைக் கற்பனை செய்து பாருங்கள்.

சாதாரணமாக சிகரெட் பீடி பிடிப்பவர்களைக் கூட எரியும் கங்குகளைக் கீழே எறிய வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறோம் ஏன்?

ஒரு சிறு நெருப்புப் பொறி கூடபயங்கரகாட்டுத் தீ போன்ற பெரிய அழிவுத்தீயை உருவாக்கி விடும்.

ஒரு சிறு அகல்விளக்கு தவறி கீழே விழுந்தால் கூட குடிசையே எரிந்து அழிந்து விடுகிறது. சில சமயம் இப்படி ஆரம்பித்து குடிசைப்பகுதி முழுவதும் சாம்பலாகி விடுகிறது.

அப்படியிருக்க ஆயிரம் பேர், இரண்டாயிரம் பேர் எரியும் தீவட்டியோடு ஊர்வலம் வரும்போது அவர்களில் ஒருவர் ஒரு தீவட்டியை வீசி எறிந்தால் அந்த 'வீதி என்னாகும்? ஊர் என்னாகும்?

ஒரு கட்டிடம் எரிந்துபோனால் கூட எவ்வளவு நஷ்டம் ஏற்படும்? அதை மீண்டும் புதுப்பித்துக் கட்டுவதற்கு எவ்வளவு செலவாகும்?

இத்தகையப் போராட்டங்களைக் கிளப்பிவிடுபவர்களின் நோக்கம்தான் என்ன? மக்கள் சிந்திக்க வேண்டும்.

இதைத் தடுத்தால் சர்வாதிகாரமா? தடை செய்தால் போலீஸ் ராஜ்யமா?

இப்படி எங்காவது அசம்பாவிதம்-விபரீதம் நடந்தால் பொது மக்களே என்ன கேட்பார்கள்?

அரசு இதை முன்பேஏன் தடை செய்யவில்லை? தீவட்டி ஊர்வலத்தை அனுமதித்து விட்டு பின்னர் கலவரம் உண்டானால் போலீஸ் தடியடி நடத்துவதைக் காட்டிலும் கண்ணீர்ப்புகை வீச்சு நடத்துவதைக்காட்டிலும் முன்பே இதைத் தடைசெய்திருக்கக்கூடாதா" என்று பொதுமக்களே கேட்கமாட்டார்களா?

(தொடரும்)

---

தலைமைக் கழக அறிக்கை எண்: 90 83

## பேச்சாளர் பட்டியலில் இருந்து நீக்கம்

கழக பிரசாரப் பணியில் முறையாக ஈடுபடாத காரணத்தால் திருநெல்வேலி நகரைச் சேர்ந்த

எரிமலை சங்கரன்

தலைமைக் கழகப் பேச்சாளர் பட்டியலில் இருந்து இன்று முதல் நீக்கப்படுகிறார்.

**ஜெயலலிதா**

சென்னை-14 கொள்கை பரப்புச் செயலாளர்
22-6-83 அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

---

தலைமைக்கழக அறிக்கை எண் 91·83

## தென்ஆற்காடு மாவட்டம் திருநாவலூர் ஒன்றிய கழகத் தோழர்களுக்கு..

கழக விதிமுறைகளுக்கு மாறாக நடந்து கழகத்தின் நற்பெயருக்குக் களங்கம் விளைவிக்கும் வகையில் செயல்பட்ட காரணத்தால்—

தென்னாற்காடு மாவட்டம், திருநாவலூர் ஒன்றியத்தைச் சேர்ந்த—

சௌ சுப்ரமணியன்
(திருநாவலூர் ஒன்றிய செயலாளர்)

இன்றுமுதல் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளிலிருந்தும் நீக்கிவைக்கப்படுகிறார்.

கழக, சார்பு மன்றத் தோழர்கள் யாரும் அவருடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ள வேண்டாமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

கழக நிறுவனத் தலைவர் புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு ப.உ.ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**என். ராசாங்கம்**

சென்னை-14 அமைப்புச் செயலாளர்
22-6-83 அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

---

பண்ருட்டி விழா சிறக்க வருகை தரும்
அண்ணாவின் இதயக் கனியே
வருக! வருக!!

பண்ருட்டி தொகுதி மக்கள் நலன் காக்கும்
புரட்சித்தலைவரின் அன்புத்தம்பி
எங்கள் அரசியல் வழிகாட்டி
மாண்புமிகு பண்ருட்டியார் அவர்களே
வருக! வருக!!

* * *

**ஆர். லட்சுமிபதி,**

தலைவர், அரிமா சங்கம்,
அகில இந்திய அண்ணா தி. மு. கழகம்,
பண்ருட்டி.

கடலூர் துரை

---





தொழிலாளர் நலன் காக்கும் குணக்குன்றே!
வருக! வருக!!
நாட்டில் பசுமை புரட்சி நிலவ
சமுதாய நலத்திட்டங்களை செயலாற்றும்
தமிழக முதல்வரே வருக! வருக!!

*

"குடிசைக்கு ஒருவிளக்கு" என
ஏழைக்கு ஒளியேற்றிய ஏழைப்பங்காளர்
புரட்சித்தலைவரின் அன்புத்தம்பி,
எங்கள் மாண்புமிகு
மின்துறை அமைச்சரே வருக! வருக!

**தமிழ்நாடு மின்வாரிய அண்ணா**
**தொழிலாளர் சங்கம்**

தென்ஆற்காடு மின் திட்டம்
விழுப்புரம்

கடலூர் துரை

---

## பண்ருட்டி வட்டம் வருகை தரும்

பார் புகழும் மாண்புமிகு **புரட்சித்தலைவர்** அவர்களே

வருக! வருக!!







ஏழைகள் வாழ்வில் ஏற்றம்காண எந்நாளும் பாடுபடும் உத்தமத்தலைவரே
வருக! வருக!!

சாதனைகள் பல புரிந்த சரித்திரநாயகரே வருக!

"தெலுங்கு கங்கா" கொண்டு வந்த
புகழ்மணக்கும் தமிழே வருக!

புரட்சித்தலைவரின் புனிதத் தம்பிகள்
மாண்புமிகு அமைச்சர் பெருமக்களே! வருக! வருக!!

:-0-:

**எஸ். சஞ்சல்மல்,**
அனைத்திந்தியஅண்ணா தி.மு.கழகம்
தொழில் அதிபர்,
ஸ்ரீ பாலாஜி இன்ஜினியரிங் ஒர்க்ஸ்.

**துரை. அன்பரசன்,**
தென்னாற்காடு மாவட்ட
துணை செயலாளர்,

**கி. காசிநாதன்,**
நெல்லிக்குப்பம் தெ. ஆ. மாவட்டம்.

கடலூர் துரை



"பண்ருட்டி"

★ வரவேற்கும் ★

புகழ் மணக்கும் சமுதாய திட்டங்களை துவக்க வரும்
தன்னிகரில்லா தமிழகத்தின் தானைத்தலைவர்

மாண்புமிகு முதல்வர் **புரட்சித்தலைவர்** அவர்களே வருக! வருக!!

அன்பு அண்ணனுடன் வருகை தரும் எங்கள் அரசியல் வழிகாட்டி
"பண்ருட்டி" பெற்றெடுத்த தமிழகத்தின் முத்தே!
புரட்சித் தலைவரின் அன்புத்தம்பியே!

**"மாண்புமிகு பண்ருட்டியார்"**

அவர்களே வருக! வருக

பண்ருட்டி நகர் திட்டங்கள் துவக்க வரும் தமிழகத்தின் தளநாயகர்,
அண்ணாவின் இதயக்கனி புரட்சித்தலைவரின் அன்புத்தம்பிகள்!
மாண்புமிகு கே. ஏ. கே. அவர்களே வருக! வருக!
மாண்புமிகு டாக்டர் எச். வி. அண்டே அவர்களே வருக! வருக!
மாண்புமிகு சு. முத்துசாமி அவர்களே வருக! வருக!



**A. கோதண்டபாணி,**
பண்ருட்டி ஒன்றிய கழகச் செயலாளர்,
நடுக்குப்பம், பண்ருட்டி வட்டம்.

—கடலூர் துரை.



# பண்ருட்டி நெய்வேலி

★ வருகை தரும் ★

வரலாறு போற்றும்
எங்கள் இதய தெய்வமே வருக! வருக!
தன்னலம் மறந்து பொதுநலம் பேணும்
உத்தமத் தலைவரே வருக! வருக!
இந்திய வரலாற்றில்
தன்னிகரில்லா தமிழகத்தின்
முதல்வர் மாண்புமிகு

**புரட்சித்தலைவர்** அவர்களே

**வருக! வருக!!**

"பண்ருட்டி" வரவேற்கும்
சிறப்புமிகு பொதுமக்கள் திட்டங்களை துவக்கிட வருகை தரும்
மாண்புமிகு அமைச்சர் பெருமக்களே வருக! வருக!!

அன்பன்,

**A. தங்கராசு M.L.A.**
குறிஞ்சிப்பாடித் தொகுதி

P. செல்வராஜ், (ஒன்றிய செயலாளர்) S. காசிராஜன், (ஒன்றிய துணைசெயலாளர்) K. சந்திரன், (நகர செயலாளர்) து. இராமலிங்கம், (நகர அவைதலைவர், வடலூர்)

R. குப்புசாமி, (செயலாளர், சேராக்குப்பம்) டி. ஆர். சந்திரன், (சமுட்டிக்குப்பம்) ஏரப்பன் (புலியூர், செயலர்)

குறிஞ்சிப்பாடி ஒன்றியக் கழகம்,

—கடலூர் துரை

# பண்ருட்டி நகரத்தில்

பல்வேறு அபிவிருத்தி திட்டங்களை நிறைவேற்ற

வருகை தரும்

மாண்புமிகு முதல்வர்

# புரட்சித்தலைவர் அவர்களே!



பண்ருட்டி பெயரை பாரறியச்செய்தபண்பாளர்
மாண்புமிகு **திரு. ச. இராமச்சந்திரன்** அவர்களே

கொள்கைத் தங்கம்
மாண்புமிகு **திரு. கே. ஏ. கே.** அவர்களே

பாசத்திற்குரிய
மாண்புமிகு டாக்டர் **திரு. H. V. அண்டே** அவர்களே

கொங்கு நாட்டுத் தங்கம்
மாண்புமிகு **திரு. சு. முத்துசாமி** அவர்களே

**வருக! வருக!! வருக!!!**



முத்து கோவிந்தராசன்
தலைவர்

தே. ஜனார்த்தனன், பிஎஸ்.சி.
செயலாளர்

மாவட்ட எம். ஜி. ஆர். மன்றம்



அ. ப. சிவராமன், நகர செயலர் — எஸ். காத்தவராயன், அவைத்தலைவர் — ப. இராசதுரை, துணைச்செயலர் — ஏ. முருகன், பொருளாளர் — ஜி. இராமலிங்கம், ஆர். கிருஷ்ணமூர்த்தி மாவட்ட பிரதிநிதிகள்



# திருமண அழைப்பு

அன்புடையீர், வணக்கம்!

நிகழும் ருத்ரோத்காரி ஆண்டு ஆனித்திங்கள் 9-ஆம் நாள் 23-6-83
வியாழக்கிழமை காலை 9-00 மணியளவில்,







தமிழக முதல்வர் மாண்புமிகு **புரட்சித் தலைவர்** அவர்களின் சீரிய தலைமையில்




கடலூர் வட்டம்: வாண்டராசன் குப்பம்,
திரு சின்னத்தம்பி அவர்களின் பேரனும்
திரு. பழனி அவர்களின் மகனுமான
செல்வன் P. குப்புசாமி B.Sc., MBA
(Probationary Officer, SIPCOT Madras 6)

பண்ருட்டி வட்டம் கீழக்குப்பம்,
திரு. சுப்புராயன் அவர்களின் பேத்தியும்
எனது மகளுமான
செல்வி அமிர்தவள்ளிக்கும்




திருமணம், பண்ருட்டி வட்டம், கீழக்குப்பம் எனது இல்லத்தில்,

| மாண்புமிகு மின்துறை அமைச்சர் | மாண்புமிகு ஊரகத் தொழிலமைச்சர் | மாண்புமிகு நல்வாழ்வுத்துறை அமைச்சர் | மாண்புமிகு போக்குவரத்துத்துறை அமைச்சர் |
|---|---|---|---|
| திரு. ச. இராமச்சந்திரன், B. E. (Hons) F. I. E. அவர்கள் | திரு. கே. ஏ. கிருட்டிணசாமி M. A., B. L., அவர்கள் | திரு. டாக்டர் H.V. அண்டே அவர்கள் | திரு. சு. முத்துசாமி M. A. அவர்கள் |

மற்றும் நாடாளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்கள், கழக முன்னணியினர் ஆகியோர் வாழ்த்துரை வழங்க, நடைபெறவிருக்கும் திருமணத்திற்கு தாங்கள், தங்கள் சுற்றமும், நட்பும் சூழ, வருகை தந்து மண விழாவினை சிறப்பிக்க வேண்டுகிறேன்.

அன்புடன்,

**கீ. சு. வேணுகோபால்,**
பண்ருட்டி ஒன்றிய கழக செயலாளர், கீழக்குப்பம், பண்ருட்டி வட்டம்.

★ தந்தி: காடாம்புலியூர்

அழைப்பிதழ் கிடைக்கப்பெறாதவர்கள் இதையே அழைப்பிதழாக ஏற்று வருகை தர வேண்டுகிறேன்.

—கடலூர் துரை

## "பண்ருட்டி"

வரவேற்கும் சமுதாய நலத்திட்ட துவக்க விழாவிற்கு
வருகைத் தரும்
தமிழகத்தின் ஒப்பற்ற தலைவர் மாண்புமிகு முதல்வர் புரட்சித்தலைவர்
அவர்களே வருக! வருக!!



தெ.ஆ. மாவட்டத்திற்கு மேலும் மேலும் புகழ் சேர்க்கும்
எங்கள் அன்புத்தலைவர்
அமைச்சர் மாண்புமிகு
**பண்ருட்டியார்** அவர்களே
வருக! வருக!!

()--()

தமிழகத்தின் புகழ் சேர்க்க சரித்திரநாயகர்
மாண்புமிகு புரட்சித்தலைவரின் தலைமையின் கீழ்
செயலாற்றும் ஆற்றல்மிகு,
மாண்புமிகு அமைச்சர் பெருமக்களே வருக!!! வருக!!!

:-:



அன்பன்,
**N. தாஜுதீன்,**
நிலக்கிழார்,
தலைவர், அமைப்புக்குழு, அரசினர் பெண்கள் உயர்நிலைப்பள்ளி
புதுப்பேட்டை, பண்ருட்டி

தரமான, விலைமலிவான
**"பாபுலர் சேமியா"** தமிழகம் எங்கும் கிடைக்கும்
பாபுலர் சேமியா பாக்டரி, புதுப்பேட்டை, பண்ருட்டி வட்டம்
போன்: 320*420

-கடலூர் துரை

தென் ஆற்காடு மாவட்டம்
வருகை தரும்



எதையும் தாங்கும் இதயம் கொண்ட அண்ணாவின்
இதயக்கனியே வருக! வருக!!
ஏழைகள் வாழ்வில் ஏற்றம் காண
எந்நாளும் பாடுபடும்

## உத்தம தலைவரே!

வருக! வருக!!

தந்தை பெரியார் போக்குவரத்துக் கழக விழாக்கள் சிறக்க
பண்ருட்டி, விழுப்புரம் வருகை தரும்
**மாண்புமிகு அமைச்சர் பெருமக்களே வருக! வருக!**

எங்கள் அன்பிற்கும் வணக்கத்திற்கும் உரிய மாண்புமிகு அமைச்சர்
**திரு. பண்ருட்டியார் அவர்களே**
வருக! வருக!

பாசத்திற்குரிய எங்கள் அண்ணன் மாண்புமிகு அமைச்சர்
**திரு. முத்துசாமி அவர்களே**
வருக! வருக!

பேரவை பொது செயலாளர்
**திரு வை. பெருமாள் அவர்களே**
வருக! வருக!

எங்கள் சிறப்புத் தலைவர்
**திரு A. C. சண்முகம் எம். எல். ஏ. அவர்களே**
வருக! வருக!

அன்புடன்,

**K. அப்துல் அஜீஸ்** தலைவர்
**N. K. ரங்கநாதன்** பொதுச்செயலாளர்
**V. பாலகிருஷ்ணன்** பொருளாளர்

தந்தை பெரியார் போக்குவரத்துக் கழக அண்ணா தொழிலாளர் சங்கம்,
விழுப்புரம்

—கடலூர் துரை

# தந்தை பெரியார் போக்குவரத்துக் கழகம்

விழுப்புரம்

# கட்டிடங்கள் திறப்புவிழா




23 - 6 - 83 வியாழக்கிழமை இரவு 8-00 மணியளவில்

தந்தை பெரியார் போக்குவரத்துக் கழகம்

புதிதாகக் கட்டியுள்ள

தலைமை அலுவலகம்-மத்ய தொழிற்கூடம் பயிற்சி நிலையம்-டயர் புதுப்பிக்கும் பிரிவு-உணவுவிடுதி மற்றும் தொழிலாளர் ஓய்வுவிடுதி

ஆகியவற்றை விழுப்புரம் வழுதரெட்டியில்

தமிழக முதல்வர் மாண்புமிகு

# எம். ஜி. ஆர்.

அவர்கள்

திறந்துவைத்துசிறப்புரையாற்றஅன்புடன்இசைந்துள்ளார்கள்

மாண்புமிகு மின்துறை அமைச்சர்

## திரு. எஸ். இராமச்சந்திரன்

பி. இ. (ஆனர்ஸ்) எப். ஐ. இ. அவர்கள்

விழாவிற்கு தலைமை வகிக்க இசைந்துள்ளார்கள்

மாண்புமிகு ஊரகத் தொழில்துறை அமைச்சர்

## திரு. கே. ஏ. கிருஷ்ணசாமி எம். ஏ. பி. எல். அவர்கள்

மாண்புமிகு மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்

## டாக்டர் எச். வி. அண்டே அவர்கள்

மாண்புமிகு போக்குவரத்துத்துறை அமைச்சர்

## திரு. சு. முத்துசாமி அவர்கள் எம்.ஏ.

ஆகியோர் விழாவில் முன்னிலை வகிக்கவும் அன்புடன் இசைவு தந்துள்ளனர்

மற்றும் நாடாளுமன்ற, சட்டப்பேரவை, மேலவை உறுப்பினர்கள் பங்கேற்று வாழ்த்துரை வழங்குவார்கள்



## அனைவரும் வருக! வருக! வருக!

இரா. இத்தினசபாபதி
நிர்வாக இயக்குனர்,
தந்தை பெரியார் போக்குவரத்துக்கழகம் வழுதரெட்டி
விழுப்புரம் 605 602

# நெய்வேலி பண்ருட்டி



வருகை தரும்
எங்கள் இதயதெய்வம்
மாண்புமிகு
புரட்சித்
தலைவரே
வருக! வருக!
ஏழை எளியோர்களின்
நம்பிக்கை நாயகரே
வருக! வருக!

**இரா. கி. மூர்த்தி**
கிளை செயலாளர்
எம். ஜி. ஆர். மன்றம்
மந்தாரகுப்பம்-2

**பழ. தட்சிணாமூர்த்தி**
கிளைக் கழக செயலாளர்,
பழைய நெய்வேலி-2
கம்மாபுரம் ஒன்றியம்

கடலூர் துரை

---



## தென் ஆற்காடு மாவட்டம் வருகை தரும்

எங்கள் வரலாற்று பெட்டகமே வருக! உலகத் தமிழ்ச்சங்கம், உலகத்தமிழ் மாநாடு, தமிழ்ப் பல்கலைக் கழகம் கண்டு, "தெலுங் கு கங்கா" கொண்டு வந் த எங்கள் தானை தலைவரே

## புரட்சித் தலைவரே

வருக! வருக!
விழா சிறக்க வருகை தரும்
மாண்புமிகு அமைச்சர்களே
வருக! வருக!

**V. இராமச்சந்திரன்**
கடலூர் ஒன்றிய கழக அவைத்தலைவர்
பூண்டியாங்குப்பம்,
கடலூர் வட்டம்

கடலூர் துரை

---

எங்கள் கழக ஒன்றியச்
செயலாளர்
**கே எஸ், வேணுகோபால்**
மகள் திருமணத்திற்கு
வருகைதரும்
மாண்புமிகு
**தமிழக முதல்வரையும்**
அமைச்சர்பெருமக்களையும்
வருக வருக என
வரவேற்கின்றோம்

**சி. நாராயணசாமி**
கிளைக் கழக செயலாளர்
**பொ. இராமலிங்கம்**
கிளைக்கழகத்தலைவர்
**த, நடேசன்**
கிளைக் கழக பொருளாளர்
கீழக்குப்பம், பண்ருட்டி வட்டம்

கடலூர் துரை

---

## தென் ஆற்காடு மாவட்டம்

வருகை தரும்
தமிழினத்தலைவரே
வருக! வருக!
தமிழ் காக்க
ஏழை எளியோர்
நலன் காக்க
எண்ணற்ற பல
திட்டங்களை உருவாக்கி
நாட்டு நலப் பணிகளை முடித்து வரும்
கொள்கைகுன்றே வருக! வருக!



அல்லும பகலும்
அயராது தமிழ் மக்கள்
நலனுக்காக பாடுப டு
தொண் நுள்ளம்
படைத்தவரே!
மாண்புமிகு
புரட்சித்தலைவர்
அவர்களே
எங்களின் இதயதெய்வமே
வருக! வருக!

**கே. ஆர். கணபதி**
M.L.A.
சிதம்பரம் தொகுதி
அனைத்திந்திய அண்ணா தி மு. கழகம்

கடலூர் துரை

---



பண்ருட்டி ஒன்றிய
செயலாளர் திரு. கே. எஸ்
வேணுகோபால்
திருமண விழா
சிறக்க வரும்
தமிழக முதல்வர்
மாண்புமிகு
**புரட்சித்தலைவர்**
அவர்களே
வருக! வருக!
மாண்புமிகு அமைச்சர்
பண்ருட்டியார்
அவர்களே
வருக! வருக!!

**ஆதித்தன் ஸ்டோர்ஸ்,**
81, கும்பகோணம் ரோடு,
பண்ருட்டி.
போன்:— 162.
(உணவு தான்ய வியாபாரம்)

கடலூர் துரை

---



தொழிலாளர்கள் வாழ்வில்
ஏற்றம் காண
எந்நாளும் பாடுபடும்
உத்தமத்தலைவர்
மாண்புமிகு
தமிழக முதல்வர்
புரட்சித்தலைவர்
வருக! வருக!

திறமைமிகு அமைச்சர் பெருமக்களே வருக!



பொறுப்பாளர்கள்,
நெய்வேலி
அண்ணா தொழிலாளர்
ஊழியர் சங்கம்
நெய்வேலி

கடலூர் துரை

---



## பண்ருட்டி வருகை தரும்

ஏழை எளியோர்களின்
நம்பிக்கை நாயகனே
வருக! வருக!
புரட்சித்தலைவரின்
அன்புதம்பிகள்
மாண்புமிகு
அமைச்சர்களே
வருக! வருக! வருக

**தங்க. புஷ்பராசன்**
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்
திருவதிகை

---



"பண்ருட்டி" வரவேற்கும்
அரசு விழாக்களில்
கலந்துகொள்ள வரும்
சத்துணவுத் திட்ட
நாயகரே வருக! வருக!!
குழந்தைகளுக்கு
"பல்பொடி" வழங்கும்
திட்டம் கொணர்ந்த
ஏழைப் பங்காளரே
தன்னிறைவுத்
திட்டம் தந்த

## தமிழக முதல்வரே

வருக! வருக!

மாவட்ட தலைநகர்
அரசுமருத்துவமனையில்
"ஓமியோபதி பிரிவை"
உருவாக்கிய ஒப்பற்ற
தலைவரே வருக! வருக!!
மாண்புமிகு
அமைச்சர்
பெருமக்களே
வருக! வருக!!

**Dr. V. ஜெயராவ்,**
ஆலோசகர்,
தமிழ்நாடு ஓமியோபதி பெடரேஷன்,
ஈஸ்டர்ன் ஓமியோ லாப்ஸ்
நெல்லிக்குப்பம்.

கடலூர் துரை

---



சத்தான உணவு தந்த
மாண்புமிகு முதல்வர்
புரட்சித்தலைவர்
அவர்களையும்
அவரது சொத்தான
அன் புத் தம்பிகளையும்
வரவேற்று
அகமகிழ்கிறோம்.
★

**தங்க. நடலிங்கம்**
(பொதுச் செயலாளர்)

**"தில்லை" சத்தியமூர்த்தி**
M. Com (B.G.L.)
(தலைவர்)

அண்ணா பணியாளர் சங்கம்
தென்னாற்காடு மத்திய கூட்டுறவு வங்கி
கடலூர்-607 001

கடலூர் துரை

---



தங்கம் நிகர் தலைவரே!
சிங்கம் நிகர் முதல்வரே!
"பண்ருட்டி" வரவேற்கும்
நாட்டு மக்களின் நம்பிக்கை நாயகரே!
எங்களின் இதயதெய்வம்

## புரட்சித்தலைவர் அவர்களே

வருக! வருக!! வருக!!!
★ ★ ★
அன்பன்,
**கே. கலைமணி B. E.,**
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்,
முன்னாள் பேரூராட்சி மன்ற தலைவர்,
கிள்ளை சிதம்பரம் வட்டம்.

கடலூர் துரை

---

# தபால்தந்தி இலாகா

## நிலம் தேவை

செங்கற்பட்டு மாவட்டம் மற்றும் வட ஆற்காடு மாவட்டத்தின் பகுதியில், கீழ்க்காணும் இடங்களில் தபால் தந்தி மற்றும் டெலிகிராப் இலாகாவிற்கு டெலிபோன் எக்ஸ்சேஞ்ச் கட்டுவதற்கான நிலங்கள் விற்பனை செய்வதற்கான விலை ஒப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

| எண் | ஊர்கள் | டெலிபோன் எக்ஸ்சேஞ்ச் தேவைப்படும் நிலத்தின் விஸ்தீரணம் | ஊழியர் குடியிருப்புகான நிலத்தின் விஸ்தீரணம் |
|---|---|---|---|
| 1. | அரக்கோணம் | 0.50 ஏக்கர் | 1.00 ஏக்கர் |
| 2. | அம்மையார்குப்பம் | 0.50 ,, | — |
| 3. | அச்சரப்பாக்கம் | — | 0.50 ,, |
| 4. | பிரம்மதேசம் | 0.50 ,, | — |
| 5. | செங்கல்பட்டு | 1.00 ,, | 1.00 ,, |
| 6. | கூடுவாஞ்சேரி | 0.50 ,, | — |
| 7. | காஞ்சிபுரம் | — | 1.00 ,, |
| 8. | கனகம்மாசத்திரம் | 0.50 ,, | — |
| 9. | கேளம்பாக்கம் | 0.50 ,, | — |
| 10. | மேல்விஷாரம் | — | 1.00 ,, |
| 11. | மதுராந்தகம் | 0.50 ,, | — |
| 12. | பணப்பாக்கம் | 0.50 ,, | — |
| 13. | பள்ளிப்பட்டு | 0.50 ,, | — |
| 14. | ராணிப்பேட்டை | 1.00 ,, | 1.00 ,, |
| 15. | சிங்கபெருமாள் கோயில் | 0.50 ,, | — |
| 16. | சாலவாக்கம் | 0.50 ,, | — |
| 17. | திருவெட்டிபுரம் | 0.50 ,, | 1.00 ,, |
| 18. | திமிரி | 0.50 ,, | — |
| 19. | திருப்போரூர் | 0.50 ,, | — |
| 20. | உத்திரமேரூர் | — | 0.50 ,, |
| 21. | வாலாஜாபாத் | 0.50 ,, | — |
| 22. | சோளிங்கபுரம் | — | 0.50 ,, |

விலைக்கு விற்பனைக்கு இருக்கும் நிலங்கள் பள்ளிகள் மார்க்கெட்டுகள், சாலைகள் ஆகியவற்றிற்கு அருகாமையில் இருக்கவேண்டும். விற்பனைக்கு இருக்கும் நிலங்கள் ஒரே நிலமாகவோ அல்லது பக்கத்து பக்கத்து நிலமாக இருக்கவேண்டும்.

நிலத்தின் விஸ்தீர்ணம், சர்வே எண், எல்லைகள், மற்றும் நிலத்தின் உரிமையாளர் விவரம், விலை விவரம் ஆகியவற்றின் விவரங்களை எழுதி அது, டிவிஷன் இன்ஜினீயர், டெலிகிராப்ஸ், காஞ்சீபுரம் இன்ஜினீயரிங் டிவிஷன், காஞ்சீபுரம்-631501 அவர்களுக்கு இந்த அறிவிப்பு வெளியான 30 தினங்களுக்குள் பதிவுத் தபால் மூலம் கிடைக்கும்படி அனுப்பி வைக்கப்படவேண்டும். நிலங்களை விற்பனை செய்ய விரும்பும் உரிமையாளர்கள் மேற்படி சொத்துக்களை ரெவின்யூ அதிகாரிகளால் குறிப்பிட்ட நியாய விலைக்கு விற்பனை செய்யவோ அல்லது நேரடி பேச்சுவார்த்தை மூலம் விற்பனை செய்ய விரும்புகிறார்களா என்பதைத் தெளிவாக தெரிவிக்கவேண்டும்.

davp-710(298)83

---



## தமிழ்நாடு குடிசைப் பகுதி மாற்றுவாரியம்

# மறுடெண்டர் அறிவிப்பு

எண்: DI/5164/WBC/83.

கீழ்க்கண்ட பணிகளுக்கான மூடி முத்திரையிட்ட டெண்டர்கள் தமிழ்நாடு குடிசைப்பகுதிமாற்று வாரியத்தில் அல்லது இதர அரசுத் துறைகளில் அதற்கு இணையான வகுப்பில் பதிவு பெற்ற தகுதி வாய்ந்த ஒப்பந்ததாரர்களிடமிருந்து கீழ் குறிப்பிட்ட தேதிகளில் பிற்பகல் 3 மணி வரை வரவேற்கப்படுகின்றன. டெண்டர்கள் அன்றே பிற்பகல் 3.05 மணிக்கு கீழ்கையொப்பமிட்டவரால் திறக்கப்படும்.

| வரிசை எண் | பணியின் விவரம் | தகுதிவாய்ந்த ஒப்பந்ததாரர்களின் வகுப்பு | பணியின் தோராய மதிப்பு லட்சங்களில் | டேவணித் தொகை டெபாசிட் |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| | | | ரூபாய் | ரூபாய் |
| 1. | 3.78 டைப் டிசைன் படி (4 மாடிகள்) ராஜா முத்தையாபுரம் திட்டத்தில் பன்மாடி குடிசை குடியிருப்புகள் கட்டுதல் | | | |
| | குரூப் I—ஒரு பிளாக்கில் 32 குடியிருப்புகள் | மூன்றாம் வகுப்பு | 3.34 | 3,3400 |
| | குரூப் II ஒரு பிளாக்கில் 16 குடியிருப்புகள் | நான்காம் வகுப்பும் அதற்கு மேலும் | 1.92 | 1,92 |
| 2. | டொம்மிங்குப்பத்தில் உள்ள (மறுபடியும் உபயோகப்படுத்தக்கூடிய பொருட்கள் உட்பட) 160 முதல் 164 வரை உள்ள கடற்கரை பிளாக்குகளை இடித்து அழித்தல். | நான்காம் வகுப்பு | 2.00 | 2,000 |
| 3 | TD 1-82 யின் படி (3 அடுக்கு மாடிகள்) சத்தியவாணி முத்து நகரில் பன்மாடி குடிசை குடியிருப்புகள் கட்டுதல். | | | |
| | குரூப் 1 ஒரு பிளாக்கில் 48 குடியிருப்புகள் | இரண்டாம் வகுப்பும் அதற்கு மேலும் | 5.60 | 5600 |
| | குரூப் II ஒரு பிளாக்கில் 48 குடியிருப்புகள் | டை | டை | டை |
| | குரூப் III ஒரு பிளாக்கில் 36 குடியிருப்புகள் | மூன்றாம் வகுப்பும் அதற்கு மேலும் | 4.20 | 4,200 |
| | குரூப் IV ஒருபிளாக்கில் 24 குடியிருப்புகள் மற்றும் ஒருபிளாக்கில் 12 குடியிருப்புகள் | டை | டை | டை |

**டெண்டர் ஷெட்யூல்கள் கிடைக்கும் தேதிகள்:-**
இனம் எண் 1 மற்றும் 2க்கு:- 18-6-83 முதல் 4-7-83 வடிவம்
இனம் எண் 3-க்கு:- 20-6-83 முதல் 6-7-83 முடிய.

**டெண்டரின் தேதி:-**
இனம் எண் 1 மற்றும் 2-க்கு 5-7-83 ஆகும்.
இனம் எண் 3-க்கு 7-7-83 ஆகும்.

**ஒப்பந்த வடிவம்**
மொத்தம்

டெண்டர் டாக்குமெண்டுகள் தகுதிவாய்ந்த ஒப்பந்ததாரர்களுக்கு மேற்கண்ட தேதிகளில் உள்ள எல்லா வேலை நாட்களிலும் காலை 11 மணி முதல் மாலை 4 மணிக்குள் கண்காணிப்பு பொறியாளர். உலக வங்கி வட்டம் த. நா. கு. ப. மா. வாரியம் எண் 5 காமராசர் சாலை, சென்னை—600005 அவர்களின் அலுவலகத்திலிருந்து ஒவ்வொரு செட்டிற்கும் ரூ. 60 மற்றும் விற்பனை வரிகள் உபரி வரிகள் செலுத்திய சலானை சமர்ப்பித்துப் பெற்றுக்கொள்ளலாம்.

(ஒ. ம்) கண்காணிப்புப் பொறியாளர்
இடம்: சென்னை
தேதி: 3—6—83

(WBC)

டி. ஐ. பி. ஆர். 28129-83-25 SPS

PUBLISHED BY K RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D M K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34 NELSON MANICKAM ROAD MADRAS 600 029

EDITOR; E PARASURAMAN